# சுருதிசூசனம்.

1

## இருக்குவேத மந்திரம்

"அந்தரிச்சந்தி தஞ்சநெருத்ரம்ப ரோமநீஷயா
கிரக்ணந்தி ஜிக்வ யாஸஸம்."

(இ - ள்) ஜநே - மனிதர்களுள், பரா - மேன்மை பொருந்தியவனை, ருத்ரம் - உருத்திரனை, மஷயா - தியானத்தால், அந்தா உளத்தில், அச்சந்தி - தியானிப்பவர்கள், ஜிக்வா - நாவினால், ஸஸம் - சுவைபொருந்திய சோற்றை, கிரக்ண - உட்கொள்வார்கள்.

ஆகார மருந்துவதற்கு முன் சிவபெருமானை வழிபட்டொழுக வேண்டுமென்பது கருத்து.

2

எஜுர்வேதம் - ச - ம் - கண்டம் உருத்திரசங்கிதை மந்திரம்.

"யோருத்ரோ அக்னௌயோ அப்ஸடய ஓஷ பதீஷுயோருத்ரோ
விச்வாபுவனாவி விவேசத ஸ்னமருத்ராய நமோ அஸ்து."

(இ - ள்) யா - எந்த, ருத்ரா - உருத்திரன், அக்னௌ - அக்கினியின் கண்ணுள்ளான், யோ அப்ஸ - நீரின்கண்ணுள்ளான், யஓஷதீஷ அவுடதங்களிலுள்ளான், யோருத்ரோ விஸ்வாபுவநாவிவேச - உலகத்திலுள்ள பொருள் அனேகங்களில் பிரவேசித்துள்ளான், தஸ்மைருத் ராயநமோ அஸ்து - அவ்விதம் தொண்டர்களை ஆட்கொள்ள பலதிரு மேனிகளைத் தாங்கி எங்குநிறைந் துநிற்கும் ருத்ரனுக்கு நமஸ்காரம்.

நீரெனவே கலசமுதலியவற்றிலும், ஔஷதி எனவே கொன்றை வில்வ முதலியவற்றிலும், விஸ்வமெனவே, லோகம், மண், கல், சூரியன், முதலியவற்றிலும் இறைவனிருப்பனென்பதாம்.

ப - ர்

சித்தாந்தம் - 1914 ஆூ - ஆகஸ்ட் மீ

# சுருதிசூசனம்

## இருக்கு யஜுஸ் சாமம் மூன்றிலுமுள்ள மந்திரம்.

“ஆவேராஜனமத்துவாஸ்யருத்திரம்ஒதாரம்ஸத்தியயஜம்ரோதஸ்யோ அக்கினிபுராதனயித்னோரசிததாதஇரண்யரூபம்வஸேகிருணுத்வம்.”

(இதன் பொருள்) ஆரோதஸ்யோ - வானத்திலும் பூமியிலும் புகழ்ப்பெற்றவர், அத்தாஸ்ய - யாக முதலிய பலகருமங்களுக்கு, ராஜானம் - சுதந்தரரா யுள்ளவர், ஸத்தியயஜம் - உண்மையால் பூஜிக்கப்படுகிறவர், ஒதாரம் - எல்லாராலும் பூஜிக்கப்படுவர், அக்னிம் - அக்னியின் கண்ணுள்ளார், ருத்ரம் - பரமேஸ்வரரிவரை சித்தாத் - மனதிற்கெட்டாததாயுள்ள; தனயித்னோ - மேகம்போன்ற மரணத்திற்கு, புரா - முன்னரே அவஸே - மோட்சத்திற்காக, இரண்யரூபம் - சூரிய மண்டலத்தில் ஆராதிக்கத்தக்கவரைக் கிருணுத்வம் - பூஜைசெய்க.

ப - ர்

சித்தாந்தம் - 1914 ஸூ - அக்டோபர் மீ

---

# சுருதிசூசனம்

## யசுர்வேதம்

“விருபேப்யோ விஸ்வரூபேப்யச்சவோநமோ.”

(இதன் பொருள்) விரூபர்க்கும் விசுவரூபர்க்கும் நமஸ்காரம்.

## ஷை 1.

“நீலக்ரீவாயச ஸிதிகண்டவாயச”

(இதன் பொருள்) நீலக்கிரீவர்க்கு நமஸ்காரம் சிதிகண்டர்க் நமஸ்காரம்.

## இருக்குவேதம்

“ஆவோராஜா நமப்வரஸ்ய”

(இதன் பொருள்) உன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டு உன்யஞ்ஞத்திற்குக் கர்த்தாவாக உருத்திரரைத் தேடிக்கொள்.

## யசுர்வேதம்

“நமஸ்தே ருத்ரமந்யவே”

(இதன் பொருள்) உருத்திரரே உமது ஞானத்திற்கு நமஸ்காரம்.

ப - ர்

சித்தாந்தம் - 1914 ௵ - நவம்பர் ௴

---